உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# அப்பர் புகழ்மாலை

---

சுதந்திர நூற்கருவூல அமைச்சர்

தி. கு. கி. நாராயணசாமி நாயடு அவர்கள்

தொகுத்தது




சாது அச்சுக்கூடம்,

இராயப்பேட்டை, சென்னை

உரிமை
செய்யப்பட்டது

1929

அணா நான்கு

அப்பர்சுவாமிகள் மாட்டுப்

பேரன்பு பூண்டு

சிவபக்தி அடியார் பக்தியிற் சிறந்து விளங்கிய

சிவநேசச் செல்வர்

கிழக்கு மருதூர்

திருச்சிற்றம்பல இல்லம்

**திருவாளர் - தி. கு. கிருஷ்ணசாமி நாயடு அவர்கள்**

நினைவுக்குறியாக

வெளியிடப்பட்டது.

79-5

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# அப்பர் புகழ்மாலை

---

## சுந்தரர் தேவாரம்

திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
  திருநாவுக் கரையன்ற னடியார்க்கு மடியேன்
பெருநம்பி குலச்சிறைதன் னடியார்க்கு மடியேன்
  பெருமிழலைக் குறும்பர்க்கும் பேயார்க்கு மடியேன்
ஒருநம்பி யப்பூதி யடியார்க்கு மடியேன்
  ஒலிபுனல்சூழ் சாத்தமங்கை நீலநக்கர்க் கடியேன்
அருநம்பி நமிநந்தி யடியார்க்கு மடியேன்
  ஆரூரன் ஆரூரி லம்மானுக் காளே. க

நற்றமிழ் வல்ல ஞானசம் பந்தன்
  நாவினுக் கரையன் நாளைப் போவானுங்
கற்ற சூதனற் சாக்கியன் சிலந்தி
  கண்ணப்பன் கணம் புல்லனென் றிவர்கள்
குற்றஞ் செய்யினுங் குணமெனக் கருதுங்
  கொள்கை கண்டுநின் குரைகழ லடைந்தேன்
பொற்றிரண் மணிக் கமலங்கள் மலரும்
  பொய்கை சூழ்திருப் புன்கூருளானே. உ

## திருத்தொண்டர் திருவந்தாதி

**(நம்பியாண்டார் நம்பி)**

நற்றவ னல்லூர்ச் சிவன்றிருப் பாதந்தன் சென்னிவைக்கப்
பெற்றவன் மற்றிப் பிறப்பற வீரட்டர் பெய்கழற்ருள்
உற்றவ னுற்றவிட மடையா ரிடவொள் ளழுதாத்
துற்றவ னூரி னுவுக் கரசெனுந் தூமணியே. க

மணியினை மாமறைக் காட்டு மருந்தினை வண்மொழியாற்
றிணியன நீள்கத வந்திறப் பித்தன தென்கடலிற்
பிணியன கன்மிதப் பித்தன சைவப் பெருநெறிக்கே
அணியன நாவுக் கரையர் பிரான்ற னருந்தமிழே. உ

## திருநாவுக்கரசுதேவர் திருவேகாதசமாலை

**(நம்பியாண்டார் நம்பி)**

புலனொ டாடித் திரிம னத்தவர்
பொறிசெய் காமத் துரிச டக்கிய
புனித நேசத் தொடுத மக்கையர்
புணர்வி னுலுற் றுரைசெ யக்குடர்
சுலவு சூலைப் பிணிகொ டுத்தொளிர்
சுடுவெ ணீறிட் டமண கற்றிய
துணிவி னுன்முப் புரமெ ரித்தவர்
சுழலி லேபட் டிடுத வத்தினர்
உலகின் மாயப் பிறவி யைத்தரு
முணர்வி லாவப் பெரும யக்கினை
யொழிய வாய்மைக் கவிதை யிற்பல
வுபரி பாகப் பொருள்ப ரப்பிய
அலகின் ஞானக் கடலி டைப்படு
மமிர்த யோகச் சிவவொ ளிப்புக
வடிய ரேமுக் கருளி னைச்செயு
மரைய தேவத் திருவ டிக்களே. க

திருநாவுக் கரசடி யவர்நாடற் கதிநிதி
தெளிதேனெத் தினியசொன் மடவாரூர்ப் பசிமுதல்
வருவானத் தரிவையர் நடமாடிச் சிலசில
வசியாகச் சொலுமவை துகளாகக் கருதிமெய்
யுருஞானத் திரண்மன முருகாநெக் கழுதுகண்
ணுழவாரப் படைகையி லுடையான்வைத் தனதமிழ்
குருவாகக் கொடுசிவ னடிசூடத் திரிபவர்
குறுகார்புக் கிடர்ப்படு குடர்யோனிக் குழியிலே. உ

குழிந்துசுழி பெறுநா பியின்கொண் மயிர்நிரையார்
குரும்பை முலையிடையே செலுந்தகை நன்மடவார்
அழிந்தபொசி யதிலே கிடந்திரவு பகனீ
யளைந்தயரு மதுநீ யறிந்திலைகொன் மனமே
கழிந்தகழி கிடுநா ளினங்கிதய நெகவே
கசிந்திதய மெழுநா றரும்பதிக நிதியே
பொழிந்தருளு திருநா வினெங்களரசினையே
புரிந்துநினை யிதுவே மருந்துபிறி திலையே. ௩

இலைமா டென்றிடர் பரியா ரிந்திர
னேயொத் துறுகுறை வற்றுலு
நிலையா திச்செல்வ மெனவே கருதுவர்
நீள்சன் மக்கட விடையிற்புக்
கலையார் சென்றர னெறியா குங்கரை
யண்ணப் பெறுவர்கள் வண்ணத்தின்
சிலைமா டந்திகழ் புகலூ மூருறை
திருநா வுக்கர சென்போரே. ௪

என்பட்டிக் கட்டிய விந்தப்பைக் குரம்பையை
யிங்கிட்டுச் சுட்டபி னெங்குத்தைக் குச்செலுமிது
முன்பிட்டுச் சுட்டிவ ருந்திக்கெத் திக்கென
மொய்ம்புற்றுக் கற்றறி வின்றிக்கெட் டுச்சில

வன்பட்டிப் பிட்டர்க டுன்புற்றுப் புத்தியை
வஞ்சித்துக் கத்திவி ழுந்தெச்சுத் தட்டுவர்
அன்பர்க்குப் பற்றிலர் சென்றர்ச்சிக் கின்றில
ரந்தக்குக் கிக்கிரை சிந்தித்தப் பித்தரே. ரு

பித்தரசு பதையாத கொத்தைநிலே யுளதேவு
பெட்டியுரை செய்துசோறு சுட்டியுழல் சமண்வாயர்
கைத்தரசு பதையாத சித்தமொடு சிவபூசை
கற்றமதி யினனேசை யித்தரசு புகழ்ஞால
முத்திபெறு திருவாள னெற்று ணேயின்
மிதவாமல் கற்றுணேயில் வருமாதி
பத்தரசு வசைதிர வைத்ததன தமிழ்மாலே
பற்பலவு மவையோத நற்பதிக நிதிதானே. சு

பதிகமே ழெழுநூறு பகருமா கவியோகி
பரசுநா வரசான பரமகா ரணவீசன்
அதிகைமா நகர்மேவி யருளினு லமண்மூட
ரவர்செய்வா தைகடரு மனகன்வார் கழல்சூடி
னியரா குவர்சீர்மை யுடையரா குவர்வாய்மை
நெறியரா குவர்பாவம் வெறியரா குவர்சால
மதியரா குவரீச னடியரா குவர்வான
முடையரா குவர்பாரின் மனிதரா னவர்தாமே. எ

தாமரைநகு மகவிதழ் தகுவன
சாய்பெறுசிறு தளிரினே யனேயன
சார்தருமடி யவரிடர் தடிவன
தாயினுநல கருணேயை யுடையன
தூமதியினே யொருபது கொடுசெய்த
சோதியின்மிகு கதிரினே யுடையன
தூயனதவ முனிவர்கள் தொழுவன
தோமறுகுண நிலேயின தலேயின

வோமரசினை மறைகளின் முடிவுக
ளோலிடுபரி சொடுதொடர் வரியன
வோவறுமுணர் வொடுசிவ வொளியனை
யூறியகசி வொடுகவி செய்தபுக
ழாமரசுய ரகநெகு மவருள
ஞாரசதி கையினர னருளவ
ஞமரசுகொ ளரசெனை வழிமுழு
தாளரசுத னடியிணை மலர்களே. அ

அடிநாயைச் சிவிகைத் தவிசேறித் திரிவித்
தறியாவப் பசுதைச் சிறியோர்பாற் செறியுங்
கொடியேனுக் கருளைத் திருநாவுக் கரசைக்
குணமே ருத்தனைவிட் டெனையா மொட்டகல்விற்
பிடியா ரப்பெறுதற் கரிதாகச் சொலுமப்
பிணறூ லைப்பெருகப் பொருளா கக்கருதுஞ்
செடிகா யத்துறிகைச் சமண்மூடர்க் கிழவுற்
றதுதேவர்க் கரிதச் சிவலோகக் கதியே. கூ

சிவசம் பத்திடைத் தவஞ்செய்து
திரியும் பத்தியிற் சிறந்தவர்
திலகன் கற்றசிட் டன்வெங்தொளிர்
திகழும் பைம்பொடித் தவண்டணி
கவசம் புக்குவைத் தான்கழல்
கருதுஞ் சித்தனிற் கவன்றிய
கரணங் கட்டுதற் கடுத்துள
களகம் புக்கநற் கவந்திய
னவசம் புத்தியிற் கசிந்துகொ
டழுகண் டத்துவைத் தளித்தன
னனகன் குற்ற மற்ற பண்டித
னரசெங்கட் கொர்பற் றுவந்தறு

பவசங் கைப்பதைப் பரஞ்சுடர்
படிறின் றித்தனைத் தொடர்ந்தவர்
பசுபந் தத்தினைப் பரிந்தடு
பரிசொன் றப்பணிக்கு நன்றுமே. கo

நன்றுமாதரநாவினுக்கரைசடி நளினம்வைத்துயினல்லால்
ஒன்றுமாவதுகண்டில முபாயமற்றுள்ளனவேண்டோமால்
என்றுமாதியுமந்தமுமில்லதோ ரிகபரத்திடைப்பட்டுப்
பொன்றுவார்புகுஞ்சூழலிற்புகேம் புகிற்பொறியிலேம்புல
[னேடே. கக

திருத்தொண்டர் புராணசாரம்

(கோற்றவன்குடி உமாபதிசிவம்)

போற்றுதிரு வாமூரில் வேளாண் டொன்மைப்
பொருவில்கொறுக் கையரதிபர் புகழ னூர்பான்
மாற்றருமன் பினிற்றிலக வதியா மாது
வந்துதித்த பின்புமரு ணீக்கி யாருந்
தோற்றியமண் சமயமுறு துயர நீங்கத்
துணைவரருள் தரவந்த சூலை நோயாற்
பாற்றருநீ ளிடரெய்திப் பாடலிபுத் திரத்திற்
பாழியொழித் தரனதிகைப் பதியில் வந்தார். க

வந்துதமக் கையரருளால் நீறு சாத்தி
வண்டமிழால் நோய்தீர்ந்து வாக்கின் மன்னய்
வெந்தபொடி விடம்வேழம் வேலை நீந்தி
வியன்சூலங் கொடியிடபம் விளங்கச் சாத்தி
அந்தமிலப் பூதிமக னரவு மாற்றி
யருட்காசு பெற்றுமறை யடைப்பு நீக்கிப்
புந்திமகிழ்ந் தையாற்றிற் கயிலை கண்டு
பூம்புகலூ ரான்பாதம் பொருந்தி னரே. உ

## நால்வர் நான்மணிமாலை

### (துறைமங்கலம் - சிவப்பிரகாச சுவாமிகள்)

வீட்டிற்கு வாயி லெனுங்தொடை சாத்துசொல் வேந்தபொ
வாட்டிற்கு வல்ல னொருவற்கு ஞான வமுதுதவி [து
நாட்டிற் கிலாத குடர்நோய் நினக்குமுன் னல்கினுமென்
பாட்டிற்கு நீயு மவனுமொப் பீரெப் படியினுமே. க

எனக்கன்பு நின்பொருட் டெய்தாத தென்கொல்வெள் ளேறுடையான்
தனக்கன்பு செய் திருத் தாண்டக வேந்தவித் தாரணியில்
நினக்கன்பு செய்கின்ற அப்பூதியைச்சிவ நேசமுறும்
இனர்க்கன்பு செய்நம்பி யாரூர னேத்து மியல்பறிந்தே. உ

கொள்ளைக் கதிர்முத்தின் பந்தருஞ் சின்னமுங் கொள்ளு
பிள்ளைக் கதுதகு நாவர சாய பெருந்தகையோய் [மொரு
கள்ளைக் குவளை யுமிழ்வீ ழியிற்படிக் காசொன்றுநீ
வள்ளைக் குழையுமை பங்காளர் கையிலென் வாங்கினையே.

தாயிலி யாகுஞ் சிவபெரு மான்றனைத் தானெனுமோர்
கோயிலி னாறி வாகிய நாமமுன் கொண்டிருந்த
வாயிலி னணவ மாகுங் கபாடமு மன்றிறந்து
நோயிலி யாகிய சொல்லிறை காட்டுவ னேக்குதற்கே. ச

பாட்டான் மறைபுக ழும்பிறை சூடியைப் பாடிமகிழ்
ஊட்டா மகிழ்சொல் லிறைவனைப் பாடி யுவப்புறுக்க
வேட்டான் மலிபெருங் கல்லவன் போல மிதப்பனெனப்
பூட்டா மறிதிரை வார்கடற் கேவிழப் போதுவனே. ரு

அருகக் கடல்கடந் தேறிய தோசிலை யம்பியெனப்
பெருகக் கடல்கடந் தேறிய தோசொல் பெருமிடறு
கருகக் கடல்விட முண்டோ னடியிற் கசிந்துமன
முருகக் கடலன்பு பெற்றசொல் வேந்த வுனக்கரிதே. சு

றுடைவாழை மேன்மட வாரல்குற் பாம்பு தொடமயங்கி
நடைவாய் பிணமெனப் பட்டார் பெறுகிலர் நச்சுகுலே
யுடைவாழை மேலுர கந்தீண்ட மாய்ந்த வொருவனுயிர்
அடைவா னருள்புரி யுந்திரு நாவுக் கரசினையே. எ

பெற்று னினைப்பெற் றவர்போற் பெறலும் பிறப்பதுண்டே
நற்று ரணியில் நினைப்போற் பிறப்பது நல்லகண்டாய் [ல்
செற்றூர் புரமெரி செய்தவில் வீரன் றிருப்பெயரே
பற்று மறிவெண் டிரைக்கட னீந்திய பாவலனே. அ

ஊர்ந்து வருமிள வேறுடை யான்ற னுளத்தருளாற்
சார்ந்து சமண்வீட் டுறுமுனக் கேவருஞ் சைவநலங்
கூர்ந்து மிளிர்தரு நாவர சேநல் குரவுமுனஞ்
சேர்ந்து மருவினர்க் கேசிறந் தோங்குறுஞ் செல்வமுமே.

உற்று னலன்றவந் தீயினின் றுனல னாண்புனலா
வற்று னலனுகர் வுந்திரு நாவுக் கரசெனுமோர்
சொற்று னெழுதியுங் கூறியு மேயென்றுந் துன்பில்பதம்
பெற்று னொருநம்பி யப்பூதி யென்னும் பெருந்தகையே.

## அ ரு ட் பா

### (இராமலிங்க சுவாமிகள்)

திருத்தகுசீ ரதிகையருட் டலத்தி னோங்குஞ்
  சிவக்கொழுந்தி னருட்பெருமைத் திறத்தால் வாய்மை
உருத்தகுமெய் யுணர்ச்சிவடி வாகிச் சைவ
  வொளிவிளங்க நாவரசென் றொருபேர் பெற்றுப்
பொருத்தமுற வுழவாரப் படைகைக் கொண்ட
  புண்ணியனே நண்ணியசீர்ப் புனித னேயென்
கருத்தமர்ந்த கலைமதியே கருணை ஞானக்
  கடலேநின் கழல்கருதக் கருது வாயே. க

வாய்மையிலாச் சமணுதர் பலகாற் செய்த
வஞ்சமெலாந் திருவருட்பேர் வலத்தால் நீந்தித்
தூய்மைபெருஞ் சிவநெறியே விளங்க வோங்குஞ்
சோதிமணி விளக்கேயென் துணையே யெம்மைச்
சேய்மைவிடா தணிமையிடத் தாள வந்த
செல்வமே யெல்லையிலாச் சிறப்பு வாய்ந்துள்
ஆய்மையுறு பெருந்தகையே யமுதே சைவ
அணியேசொல் லரசெனும்பே ரமைந்த தேவே. உ

தேவரெலாந் தொழுந்தலைமைத் தேவர் பாதத்
திருமலரை முடிக்கணிந்து திகழ்ந்து நின்ற
நாவரசே நான்முகனும் விரும்பு ஞான
நாயகனே நல்லவர்க்கு நண்ப னேயெம்
பாவமெலா மகற்றியருட் பான்மை நல்கும்
பண்புடைய பெருமானே பணிந்து நின்பான்
மேவவிருப் புறுமடியர்க் கன்பு செய்ய
வேண்டினே னவ்வகைநீ விதித்தி டாயே. ௩

விதிவிலக்கீ தென்றறியும் வினைவொன் றில்லா
வினையனே னெனினுமென்னை விரும்பி யென்னுள்
மதிவிளக்கை யேற்றியருண் மனையின் ஞான
வாழ்வடையச் செயல்வேண்டும் வள்ள லேநற்
பதிமலர்த்தாள் நிழலடைந்த தவத்தோர்க் கெல்லாம்
பதியேசொல் லரசெனும்பேர் படைத்த தேவே
கதிதருகற் பகமேமுக் கனியே ஞானக்
கடலேயென் கருத்தேயென் கண்ணு ளானே. ச

கண்ணுளே விளங்குகின்ற மணியே சைவக்
கனியேநா வரசேசெங் கரும்பே வேதப்
பண்ணுளே விளங்கவருட் பயனே யுண்மைப்
பதியோங்கு நிதியேநின் பாத மன்றி

விண்ணுளே யடைகின்ற போக மென்றும்
விரும்பேனென் றனையாள வேண்டுங் கண்டாய்
* "ஒண்ணுளே யொன்பதுவாய் வைத்தாய்" என்ற
உத்தமனே சித்தமகிழ்ந் துதவு வோனே. ரு

ஓங்காரத் தனிமொழியின் பயனைச் சற்றும்
ஓர்கிலேன் சிறியேனிவ் வுலக வாழ்வில்
ஆங்காரப் பெருமதமால் யானை போல
அகம்பாவ மயனுகி யலைகின் றேனுன்
பாங்காய மெய்யடியர் தம்மைச் சற்றும்
பரிந்திலே னருளடையும் பரிசொன் றுண்டோ
தீங்காய செயலனைத்து முடையே னென்ன
செய்வேன்சொல் லரசேயென் செய்கு வேனே. சு

செய்வகையொன் றறியாத சிறியே னிந்தச்
சிற்றுலக வாழ்க்கையிடைச் சிக்கி யந்தோ
பொய்வகையே புரிகின்றேன் புண்ணி யாநின்
பொன்னடியைப் போற்றிலேன் புனித னேநான்
உய்வகையெவ் வகையாது செய்வே னீயே
யுறுதுணையென் றிருக்கின்றே னுணர்வி லேனை
மெய்வகையிற் செலுத்தநினைத் திடுதி யோசொல்
வேந்தேயென் னுயிர்த்துணையாய் விளங்குங் கோவே.

விளங்குமணி விளக்கெனநால் வேதத் துச்சி
மேவியமெய்ப் பொருளையுள்ளே விரும்பி வைத்துக்
களங்கறுமெய் யன்பரெல்லாங் களிப்ப வன்றோர்
கற்றுணையாற் கடல்கடந்து கரையிற் போந்து
துளங்குபெறுஞ் சிவநெறியைச் சார்ந்த ஞானத்
துணையேநந் துரையேநற் சுகமே யென்றும்
வளங்கெழுமா கமநெறியை வளர்க்க வந்த
வள்ளலே நின்னருளை வழங்கு வாயே. அ

---

* திருப்பூம்புகலூர்த் திருத்தாண்டகம். 'எண்ணுகேன்'.

அருள்வழங்குந் திலகவதி யம்மை யார்பின்
அவதரித்த மணியேசொல் லரசே ஞானத்
தெருள்வழங்குஞ் சிவநெறியை விளக்க வந்த
செழுஞ்சுடர்மா மணிவிளக்கே சிறிய னேனை
இருள்வழங்கு முலகியனின் றெடுத்து ஞான
இன்னருள்தந் தாண்டருள்வா யின்றே லந்தோ
மருள்வழங்கும் பவநெறியிற் சுழல்வே னுய்யும்
வகையறியே னின்னருட்கு மரபன் றீதே. ௯

தேர்ந்தவுளத் திடைமிகவுந் தித்தித் தூறுஞ்
செழுந்தேனே சொல்லரசாந் தேவே யெம்மை
சார்ந்துதிகழ் அப்பூதி யடிகட் கின்பந்
தந்தபெருந் தகையேயெந் தந்தை யேபுட்
கூர்ந்தமதி நிறைவேயென் குருவே யெங்கள்
குலதெய்வ மேசைவக் கொழுந்தே துன்பந்
தீர்ந்தபெரு நெறித்துணையே யொப்பி லாத
செல்வமே யப்பனெனத் திகழ்கின் றோனே. ௧௦

—ஆளுடைய அரசு அருண்மாலை.

பூவுக் கரையரும்வான் புங்கவரும் போற்றுதிரு
நாவுக் கரையரெனு நன்னும—மேவுற்ற
தொண்டர்க்கு நீகட்டுச் சோறெடுத்தா யென்றறிந்தோ
தொண்டர்க்குத் தொண்டனென்பார் சொல். ௧௧

—சிவநேச வெண்பா.

சொற்றுணை வேதிய னென்னும் பதிகச் சுருதியைநின்
பொற்றுணை வார்கழற் கேற்றியப் பொன்னடிப் போதினையே
நற்றுணை யாக்கரை யேறிய புண்ணிய நாவரசைக்
கற்றுணை யாதிந்தக் கற்றுணை யாமென் கடைநெஞ்சமே. ௧௨

—திருவருண் முறையீடு.

நாட்டிற் புகழ்பெற்ற நாவுக் கரசர்முன் னூட்பதிகப்
பாட்டிற் கிரக்கமில் லீரெம் பிரானெனப் பாடவன்றே
ஆட்டிற் கிசைந்த மலர்வாழ்த்தி வேத மமைத்தமறைக்
காட்டிற் கதவந் திறந்தன ராலெங் கடவுளரே. கஙு

—திருவருள் வழக்கவிளக்கம்.

கள்ள மற்றவாக் கரசும் புத்திருங்
களிக்க வேபடிக் காசளித் தருளும்
வள்ள லென்றுமை வந்தடைந் தேற்றால்
வாய்தி றந்தொரு வார்த்தையுஞ் சொல்லீர்
எள்ள ரும்புகழ்த் தியாகரென் றொருபேர்
என்கொண் டீரிரப் போர்க்கிட வன்றோ
உள்ள மிங்கறி வீரெனை யாள்வீர்
ஒங்கு சீரொற்றி யூருடை யீரே. கச

—கொடைமடப் புகழ்ச்சி.

ஆறடுத்துச் சென்றவெங்கள் அப்பருக்கா வன்றுகட்டுச்
சோறெடுத்துச் சென்ற துணையே சுயஞ்சுடரே
ஊறெடுத்தோர் காணரிய வொற்றியப்பா வுன்னுடைய
நீறடுத்த வெண்டோ ணிலைமைதனைப் பாரேனே. கரு

—அருட்டிறத்தலைசல்.

## பெரியபுராணம்

திருநாவுக் கரசுவளர் திருத்தொண்டி னெறிவாழ
வருஞானத் தவமுனிவர் வாகீசர் வாய்மைதிகழ்
பெருநாமச் சீர்பரவ லுறுகின்றேன் பேருலகில்
ஒருநாவுக் குரைசெய்ய வொண்ணுமை யுணராதேன். க

## கந்தபுராணம்

பொய்யுரை நூல்சில புகலுந் தீயமண்
கையர்கள் பிணித்துமுன் கடல கத்திடு
வெய்யகற் றோணியாய் மிதப்ப மேற்படு
துய்யசொல் லரசர்தாள் தொழுது போற்றுவாம். உ

### உபதேச காண்டம்

முப்ப ணைத்திற மூவரிற் காட்டியோர் முதலாய்க்
கப்ப னைத்துமா ருயிரெனக் கவைத்தரு வானேற்
கொப்ப னைத்திரு நாவினுக் கரசெனு மொருபேர்
அப்ப னைத்தொழு தகற்றுது மும்மலத் தவலம். ௫

### அருணகிரி புராணம்

பன்னெடுநா ளமண்வைகிப் பருவமுறப் பசுபாசஞ்
சின்மயனின் னருள்பெற்றுச் சிறுபிணியுந் தீர்ந்தானை
இன்னிசையா லியலியம்பி வாகீச னெனுநாமந்
தன்னையுநின் மலனருளாற் றரித்தானைத் தாள்பணிவாம். ௪

### திருவிளையாடற் புராணம்

அறப்பெருஞ் செல்வி பாகத் தண்ணலஞ் செழுத்தா லஞ்ச
மறப்பெருஞ் செய்கை மாறா வஞ்சக ரிட்ட நீல
நிறப்பெருங் கடலும் யார்க்கு நீந்துதற் கரிய வேழு
பிறப்பெனுங் கடலு நீத்த பிரானடி வணக்கஞ் செய்வாம்.

### சேது புராணம்

தேவரையு முனிவரையுந் துளவ மார்பிற்
திருவரையுங் குரவரையுஞ் செல்வ மிக்கோர்
யாவரையு மேவல்கொளு நெற்றி நாட்டத்
திறைவரைமுன் னிகந்திருந்த வெண்ணந் தோன்றச்
சேவரையு நெடுங்கொடியின் றகைமை யெல்லாத்
திசைவரையுஞ் செலத்தமிழின் செய்யுள் பாடு
நாவரையர் புகழ்மொழிகள் வரைந்து கூறி
நயந்தவர்செய் திருத்தொண்டு வியந்து வாழ்வாம். ௬

### திருப்பரங்கிரி புராணம்

நீறு குளிர மேனியிலே நீறு பூசி நெடுங்கிடங்கில்
ஊறு கடன்மேற் கல்மிறுக வூறு படாது மிதந்தருளி

ஆறு தரித்த கடவுளைநல் லாறு தருதி யெனுந்தமிழின்
வீறு பகரு நாவினுக்கு வேந்தர் பாதம் பணிவாமே. எ

## திருவாரூர்ப் புராணம்

ஆலநிழ லமர்ந்தபிரா னருளி னாலே
யன்றொருகற் புணையாக வாழி நீந்தி
ஞாலமுழு துய்ந்தருள நவையி லாத
நறுந்தமிழின் பலமினிது நாளு நல்கிச்
சாலமிகு பாவமுது வேனில் வெம்மைத்
தழலாற வாகமநூற் றருமஞ் சான்ற
சீலநிறை சைவநெறி நிழல்ப ரப்புந்
திருநாவுக் கரசினடி சிந்தை செய்வாம். அ

## இலிங்க புராணம்

கூற்றினுங் கொடிய பறிதலைச் சமணர்
கொட்டுநீற் றிடையினு ளிருத்தி
நீற்றவந் நீறு விரைகமழ் புழுகு
நெய்சொரிந் தாலெனக் குளிர
மாற்றறு பசும்பொன் வடவரை குழைத்து
மாற்றலர் புரமெரி மடுத்தோன்
போற்றருங் கமலச் சேவடித் துணைகள்
போற்றிய தலைவனைத் தொழுவாம். கூ

## பிரமோத்தர காண்டம்

ஆரணநன் னிலையறியாச் சாக்கியர்க ளருங்கற்றூண்
பாரறிய மருங்கசைத்துப் படுநீரிற் புகவுந்த
வாரணநல் லுரியானை யேத்திமுந்நீர் வடதளிரில்
நாரணன்போ லினிதமர்ந்த நாவலன்பொற் றுள்தொழுவாம்.

## கூர்ம புராணம்

புல்லா ராய சமண்புலையர்
　　பொருந்த வீக்கிக் கடற்புகுத்துங்
கல்லே புணையாக் கரையேறிக்
　　கவர்வாய்ப் புள்ளின் வாய்கிழித்த
கொல்லே றுயர்க்குங் காமாரி
　　குளிர்பொற் கமலத் தாள்பழிச்சுஞ்
சொல்லே புணையாப் பவக்கடலுங்
　　கடந்தோன் பாதந் துதித்திடுவாம். கக

## காசிகாண்டம்

கருவாழிக் கரைகாணுச் சாக்கியர்கள்
　　கற்றாணிற் சிக்க யாத்துப்
பெருவாழி யிடைவீழ்ப்ப வதுபுணையாக்
　　கரையேறிப் பெட்பி னுள்ள
முருகாமெய்ம் மயிர்பொடிப்ப வோங்கெயின்மூன்
　　றெரித்தோனை யுவந்து பாடுந்
திருநாவுக் கரசனிரு சேவடிப்பூங்
　　கமலமலர் சென்னி சேர்ப்பாம். கஉ

## வாயுசங்கிதை

வலஞ்சுழி யுந்தி வயிற்றெழு நோயு
　　மயக்கிடு பிறவிவெங் நோயுங்
கலங்கியே யகலக் கரைபொரு திரங்கு
　　கருங்கட லுண்முளைத் தெழுந்த

---

(கக) புள்வாய்கிழித்த கொல்லேறு - திருமாலாகிய இடபம். புள் கஞ்சனு லேவப்பட்டது.

விலங்கொளிப் பவள வரைநிகர் முதலை
யின்னிசைத் தமிழினற் பாடிப்
புலன்களைந் திணையும் வென்றுமெய்ஞ் ஞானம்
பூத்தவன் பொன்னடி தொழுவாம். கங

மச்ச புராணம்

பெருநாவ லிருநிழற்கீழ்க் குளிர்புனற்குண்
முளைத்தெழுந்த பெம்மான் செம்மை
தருநாவுக் கிசைத்தமிழா லலைகடலி
னிடைபிணித்த தனிக்கற் றாணன்
றொருநாவா யெனமிதப்ப வீற்றிருந்தங்
கைந்தெழுத்தி னுண்மை யோதுந்
திருநாவுக் கரசிரு பிரசமலர்ச்
சேவடியைச் சிந்தை செய்வாம். கச

சங்கரநாராயணர்கோயிற் புராணம்

கரைபொரு திரங்கு விரிதிரைக் கடலிற்
கட்டின ரிட்டகற் றிரளே
பரிவுறு புணையா வதனில்வீற் றிருந்து
பழுத்தபான் மிழற்றுவண் டினமார்
முருகவி ழிதழித் தொடைசடை முடித்த
முதல்வனை வழுத்திய கோமான்
மருவுயிர்த் தினிய முருகுகொப் பளிக்கு
மலரடி வணங்குதல் செய்வாம். கரு

திருக்கூவப் புராணம்

மருக்கு லாவு மறைவனத் தோன்றிய
திருக்க பாடந் திறந்தசொல் வேந்தனை
அருட்கு லாவு மறிவினை மூடிய
இருட்க பாடந் திறக்கவு மேத்துவாம். கசு

## திருவையாற்றுப் புராணம்

செஞ்சடையார் புகழ்விதைத்துத் திருஞான நீர்தேக்கி
அஞ்சுகளை யறுத்துடனே யமணர்களை வேரறுத்துப்
பஞ்சநதிக் கைலையினிற் பயன்விளைந்து புகலூரில்
தஞ்சமுதற் கண்டபிரான் சரணகம லம்போற்றி. கஎ

## நல்லூர்ப் புராணம்

பூவி னுற்றிடு புங்கவன் மான்முதல்
தேவர் கட்கர சாகிய தேவனார்
ஏவல் பெற்றகத் தென்றும் புயத்திடு
நாவி னுக்கர சின்பத நண்ணுவாம். கஅ

## சீகாளத்தி புராணம்

வேற்று ருக்கொள் விதியறி யாவரன்
கீற்று வெண்பிறைக் கேழ்கிளர் செஞ்சடை
யாற்று ணுச்சுமை யேற்று மருந்தமிழ்
மாற்ற ருந்தவத் தோனை வழுத்துவாம். கக

## திருக்கழுக்குன்றப் புராணம்

குறித்தகுலத் திலகவல்லிக் கிளைவளைப்ப
வளைப்புண்டு கொடிய நாகம்
பறித்தகுருந் தினைமீட்டு நீற்றறையின்
வன்னிவென்று படருங் கோட்டு
வெறித்தமத மாக்களையும் விலக்கிமுழங்
கியவத்தி மீதே குண்டர்
செறித்தகல்லான் மிதந்துவருந் திருநாவுக்
கரசுநிழற் சேர்ந்து வாழ்வாம். உ௦

---

(கக) ஆற்றுணா - வழிக்குரிய கட்டமுது.

## சேவ்வந்திப் புராணம்

புத்தியற் றிருக்கும் பொய்யர் புறச்சம யத்தை நீங்கிச்
சத்தியப் பொருளை யோர்ந்து தலைவனை யறிந்து சைவ
பத்தியிற் கனிந்த ஞானப் பழத்தினை யொருகற் றூணால்
அத்தியைக் கடந்த நாவுக் கரசினை வணங்கு வோமே. உக

## திருவேண்காட்டுப் புராணம்

இற்றாணின் மரகதத்தி னொளிபகலு
மிருள்காட்ட வெழுந்து காமன்
விற்றாணி மலரெடுத்து விளையாடுந்
திருவாரூர் விளங்க வந்தோன்
கற்றூணைப் பிடித்துவளை கடல்கடந்தோ
னிருபாத கமல மன்ன
பொற்றூணைப் பிடித்துநம திடராழி
கடந்துகதி புகுத லாமே. உஉ

## திருவாவடுதுறைப் புராணம்

கற்பெருந்தூண் புணையாகக் கடல்கடந்தை
யாற்றிலெழிற் கயிலை கண்டு
பற்பணியின் விடந்தீர்த்தப் பூதிமக
வுயிரளித்துப் பதிகச் சொல்லாற்
பொற்புறுவே தாரணியக் கதவுதிறந்
தருட்புகலூர்ப் பொருளிற் சேர்ந்த
அற்புதநா வுக்கரசி னடியிணைப்பூ
முடியிலுற அமைத்தல் செய்வாம். உந

---

(உஉ) இத்ததியே திருமயிலைப் புராணத்தும் உள்ளது.

## காஞ்சிப் புராணம்

இடையறாப் பேரன்பு மழைவாரு
    மிணைவிழியு முழவா ரத்தின்
படையறாத் திருக்கரமுஞ் சிவபெருமான்
    றிருவடிக்கே பதித்த நெஞ்சும்
நடையறாப் பெருந்துறவும் வாகீசப்
    பெருந்தகைதன் ஞானப் பாடல்
தொடையறாச் செவ்வாயுஞ் சிவவேடப்
    பொலிவழகுந் துதித்து வாழ்வாம். உ௪

## பேரூர்ப் புராணம்

விஞ்சை கற்பன வேறிலை விடையவன் பதங்கள்
அஞ்சு மேயென வறியவெவ் வுலகுங்கற் புணையா
நெஞ்சு துட்கெனு நெடும்புனல் வேலையும் பிறவி
வஞ்ச வேலையு நீந்திய மன்னனைப் பணிவாம். உ௫

## திருவானைக்காப் புராணம்

கொண்ட லாடிய விழிகளுங் கோலவெண் ணீற்று
வண்ட லாடிய மேனியு மல்குமா னந்த
முண்ட தாங்கெதி ரெடுத்தென வோதுசெம் பாட்டுங்
கண்டு கேட்டரு ணவினுக் கரசினைக் கலப்பாம். உ௬

## பூவாளூர்ப் புராணம்

கருங்கடலிற் றமையமுந்தப் பெருஞ்சிலையி
    னுறப்பிணித்துக் கண்ணோ டாமை
ஒருங்குறுத்த அமணர்குழாந் துயர்க்கடலி
    னொருங்கழுந்த வுமிழ்பைந் தேறல்
நெருங்கிதழ்ப்பொற் கொன்றையும்வெண்
    தும்பையும்பா சறுகுமுடி நிலவ வைத்தார்
தருங்கருணைக் கடன்முழுகிக் கருங்கடலின்
    மிதந்தவரைச் சரணஞ் சார்வாம். உ௭

வல்லரையாம் பாடுவமென் றஞ்செழுத்தின்
பதிகத்தை வாழ்த்திச் சேர்ந்த
சொல்லரைய னல்லபத நளினங்கள்
எந்நாளுந் துதிப்பாஞ் சூழ்ந்தே. ௩௩

சீர்காழிப் புராணம்

விடற்கரிய கொடும்பாசத் தொடராறுத்தைம்
புலனுய வேழஞ் சீறி
அடற்கரியின் மும்மதமு மமணருடைத்
துன்மதமு மழிய நூறித்
தடக்கடலைக் கன்மிதவை யாலுழக்கிச்
சிவஞான தானம் வீசுங்
கடக்களிறென் றுலகேத்த வருநாவுக்
காசர்பதங் கருதி வாழ்வாம். ௩௪

சானந்தகணேச புராணம்

அற்படு மிடற்றின னருளி னுலொரு
கற்புணை யாகமாக் கடல்க டந்தவன்
நற்பெயர் தன்னையே நவிறி யுள்ளநீ
பற்பல பிறவியாம் பரவை நீந்தவே. ௩௫

திருவாப்பனூர்ப் புராணம்

மண்ணாசை பெண்ணாசை மூன்று நீத்து
மனத்தாசை யறவெறிந்தா னந்த நீர்பாய்
கண்ணாசை சிவபெருமான் காட்சிக் காக்கிக்
கருத்தாசை யவனருட்கே கைம்மா றாக்கி
யுண்ணாசை மருந்தனையார் புகலூர் மன்னு
முழவாரப் படையாளி யுருகிப் பாடும்
பண்ணாசைத் திருநாவுக் கரையன் பாதம்
பத்திபழுத் தொழுகநெஞ்சிற் பதித்து வாழ்வாம்.

---

(௩௬) மண்ணாசை என்புழி ஆசை - பொன்.

## திருப்பூவணப் புராணம்

அருள்பெருகுந் திலகவதி யாரருளா
லமண்சமய மகற்றி யன்பாற்
கருதரிய கற்புணையாற் கடனீந்திக்
கருவேலை கடப்பான் சீர்த்தி
மருவுதிரு வாமூரில் வைதிகசை
வந்தழைப்ப வந்து தோன்றித்
திருவதிகைப் பதிவருசெந் தமிழ்நாவுக்
கரையர்பதஞ் சிந்தை செய்வாம். ௩௭

## மயூரகிரி புராணம்

மணிவயிற்றிற் சூலைதவிர்த் தங்கையினிற்
புனைசூலை வன்றேட் டீட்டி
அணிதிகழ்தன் றிருப்பாதஞ் சிரஞ்சூட்டிச்
சிவனுளு மப்ப னெம்மான்
பணிவிடையி லுயர்வுற்றோன் வேளாளர்
குலம்விளக்கும் பரிதி போல்வான்
தணிவில்புகழ்த் திருநாவுக் கரையனிரு
சரணமலர் தலைமேற் கொள்வாம். ௩௮

## ஆதிபுரி புராணம்

தெருண்மிகும்பே ரன்பினுக்கோர் கொள்கலமா
யளப்பரிய தெய்வக் கற்பின்
வருதிலக வதிவருத்தங் கண்டிறைவன்
விடுஞ்சூலை வழிதான் காட்டப்
பெருகொளிவெண் ணீறணிந்து சாக்கியர்தம்
மதம்பொய்யாம் பெருமை காட்டிக்
கருநிறத்தெண் டிரைக்கடலிற் கன்மிதப்ப
வந்தவர்தாள் கருத்துள் வைப்பாம். ௩௯

வல்லரையாம் பாடுவமென் றஞ்செழுத்தின்
பதிகத்தை வாழ்த்திச் சேர்ந்த
சொல்லரைய னல்லபத நளினங்கள்
எந்நாளுந் துதிப்பாஞ் சூழ்ந்தே. ௩௩

## சீர்காழிப் புராணம்

விடற்கரிய கொடும்பாசத் தொடராறுத்தைம்
புலனைய வேழஞ் சீறி
அடற்கரியின் மும்மதமு மமணருடைத்
துன்மதமு மழிய நூறித்
தடக்கடலைக் கன்மிதவை யாலுழக்கிச்
சிவஞான தானம் வீசுங்
கடக்களிறென் றுலகேத்த வருநாவுக்
கரசர்பதங் கருதி வாழ்வாம். ௩௪

## சானந்தகணேச புராணம்

அற்படு மிடற்றின னருளி னாலொரு
கற்புணை யாகமாக் கடல்க டந்தவன்
நற்பெயர் தன்னையே நவிறி யுள்ளநீ
பற்பல பிறவியாம் பரவை நீந்தவே. ௩௫

## திருவாப்பனூர்ப் புராணம்

மண்ணாசை பெண்ணாசை மூன்று நீத்து
மனத்தாசை யறவெறிந்தா னந்த நீர்பாய்
கண்ணாசை சிவபெருமான் காட்சிக் காக்கிக்
கருத்தாசை யவனருட்கே கைம்மா றாக்கி
யுண்ணாசை மருந்தனையார் புகலூர் மன்னு
முழவாரப் படையாளி யுருகிப் பாடும்
பண்ணாசைத் திருநாவுக் கரையன் பாதம்
பத்திபழுத் தொழுகநெஞ்சிற் பதித்து வாழ்வாம்.

---

(௩௬) மண்ணாசை என்புழி ஆசை - பொன்.

## திருப்பூவணப் புராணம்

அருள்பெருகுந் திலகவதி யாரருளா
லமண்சமய மகற்றி யன்பாற்
கருதரிய கற்புணையாற் கடனீந்திக்
கருவேலை கடப்பான் சீர்த்தி
மருவுதிரு வாமூரில் வைதிகசை
வந்தழைப்ப வந்து தோன்றித்
திருவதிகைப் பதிவருசெந் தமிழ்நாவுக்
கரையர்பதஞ் சிந்தை செய்வாம். ௩௭

## மயூரகிரி புராணம்

மணிவயிற்றிற் சூலைதவிர்த் தங்கையினிற்
புனைசூலை வன்றேட் டீட்டி
அணிதிகழ்தன் றிருப்பாதஞ் சிரஞ்சூட்டிச்
சிவனுரு மப்ப னெம்மான்
பணிவிடையி லுயர்வுற்றேன் வேளாளர்
குலம்விளக்கும் பரிதி போல்வான்
தணிவில்புகழ்த் திருநாவுக் கரையனிரு
சரணமலர் தலைமேற் கொள்வாம். ௩௮

## ஆதிபுரி புராணம்

தெருண்மிகும்பே ரன்பினுக்கோர் கொள்கலமா
யளப்பரிய தெய்வக் கற்பின்
வருதிலக வதிவருத்தங் கண்டிறைவன்
விடுஞ்சூலை வழிதான் காட்டப்
பெருகொளிவெண் ணீறணிந்து சாக்கியர்தம்
மதம்பொய்யாம் பெருமை காட்டிக்
கருநிறத்தெண் டிரைக்கடலிற் கன்மிதப்ப
வந்தவர்தாள் கருத்துள் வைப்பாம். ௩௯

### திருவாலங்காட்டுப் புராணம்

குரவர்தங் குறிப்புக் காகக் கலன்கழி கொள்கை பூண்டு
பரனடி யடைந்த நங்கை பணியணி யாகத் தாங்கி
விரவிய வமுதத் தீஞ்சொன் மெல்லிசை வீறும் பாவால்
அரன்மகிழ் சிறந்த நாவுக் கரசினை யகத்துள் வைப்பாம்.

### திருமுருகன்பூண்டிப் புராணம்

பற்ற லார்புரம் பொடிபட
நகைத்தவன் பதமலாற் பிறவிக்கு
மற்று வேறிலை மருந்தெனத்
திருந்திய மாசிலன் புடையானைத்
துற்ற சாக்கியர் பிணித்திடு
நெடியகற் றாணையஞ் செழுத்தோதி
எற்று வாரியின் மிதந்திடப்
பணித்தவா கீசனைத் துதிசெய்வாம். சக

### பவானிகூடற் புராணம்

அடலயிற் சூலப் பொருபடைத் திருக்கை
யமலன தருளினற் கொடிய
விடலையிற் றீய வஞ்சக வமணர்
வீக்குகற் றாணொடு மிட்ட
கடலையும் பிறவிக் கடலையும் பஞ்சாக்
கரவருட் பாதையிற் கடந்து
நடலைவாழ் வொழிந்து முத்திவாழ் வடைந்த
நாவினுக் கரையர்தாள் தொழுவாம். சஉ

### கருவூர்ப் புராணம்

சூழிமால் யானை தாழப் பிணித்தகற் றாணந் தாழா
தாழிவாய் மிதப்ப மேலா மைந்தெழுத் துணர்வி னோங்கிக்

---

(சஉ) பாதை — மரக்கலம்.

காழிவாழ் ஞானம் பூத்த கவுணியக் கொழுந்தை நட்ட
வாழிவா கீசர் வாச மலர்ப்பதம் வணங்கல் செய்வாம். சஙு

திருவோத்தூர்ப் புராணம்

உருகலுறு முழுவலெனு முவாக்கடலு ளுளந்ததும்பிப்
பெருகுமருட் கடலழுந்திப் பிறவியெனும் பெருங்கடலுந்
திருகுமனத் தமணரிடுந் திரைக்கடலும் விடநீந்தி
வருமொருநா வுக்கரசின் மலர்ப்பதங்க ளிறைஞ்சுவாம். சச

திருச்சுழியற் புராணம்

புல்லோடுந் தழையோடும் பூசிப்பார் தமக்கெதிரே
வல்லோடுந் தனத்துமலை மகளோடு வருவானைச்
சொல்லோடும் பொருளோடுந் துயரோடும் படிபாடிக்
கல்லோடு மிதந்தானைக் கருத்தோடும் பணிகுவமால். சரு

மருதூர்ப் புராணம்

உடல்குழைய மொழிகுழற விழிநீர் மல்க
வுளத்திலன்பு கனிந்தொழுக வுரக னுச்சிக்
கடல்புடைசூழ் புடவியிடைத் தலங்க டோறுங்
கவியலங்க லணிந்தரனைக் கண்டு போற்றி
நடைநடந்து கால்தளர்ந்திட் டிருகை யூன்றி
நடுக்கமுறத் தவழ்ந்து பொய்கை நன்னீர் மூழ்கி
வடகயிலைப் பொருப்பையா றதனிற் கண்ட
வாகீச ரிணைமலர்த்தாள் வணக்கஞ் செய்வாம். சசா

ஆதித்தபுரி புராணம்

மல்லாருஞ் சூலையெனு மிருவினையொப்
பாற்பவுத்த மாயா பேதம்
இல்லாமற் றிலகவதி யாரெனுஞா
னத்தாரு ரிணைத்தாள் சேர்ந்தே

---

(சச) உழுவல் - விடாது தொடர்ந்த அன்பு.

கல்லாலோ ருததிதனைக் கடந்துபா
திரிப்புலியூர்க் கண்டு தீதிற்
செல்லாத சொல்லரசி னிலைபரவி
மகிழ்பூத்துச் செழித்து வாழ்வாம். சஎ

## திருக்குற்றாலப் புராணம்

திருநீற்றை மெய்யழுத்தி யஞ்செழுத்தை
நெஞ்சழுத்திச் சிலைக்கை மாரன்
உருநீற்றும் பெருமானை யுறவழுத்திச்
சமணரெனு மொன்னார் மூட்டும்
பொருநீற்றுக் குடவறையுங் கடகரியும்
விடவரவும் புறங்கண் டாழிக்
கருநீத்தங் கடப்பவொரு கற்றோணி
யுகைத்தானைக் கருத்துள் வைப்பாம். சஅ

## திருநெல்வேலிப் புராணம்

குண்டர்பா யுடையர்வெங் கொடிய பாதகர்
தெண்டிரை யிடத்திடு சிலைமி தப்பவெம்
மண்டர்நா யகனெழுத் தஞ்சு மோதியே
தண்டமிழ் பாடினர் சரணம் போற்றுவாம். சகூ

## மருதவன புராணம்

வடமருவு தென்னிழலிற் கருணைவடி
வாய்விளங்கு வரதன் போல
விடமமிர்த மெனப்பருகிச் சூலந்தோண்
மிசையேற்று விடைமேற் கொண்டு
தடமருவு தரணியிடைத் திகழ்ந்திடுவா
கிசர்பத சரோரு கத்தைத்
திடமுறுமன் பொடுதினமுஞ் சிந்திப்போர்
துயர்களெல்லாஞ் சிந்திப் போமால். ருo

## திருநல்லூர்ப்பெருமணப் புராணம்

பறிதலைப்பா யுடைக்கொடிய பாதகரா
　கியகுண்டர் பல்லோர் கூடி
எறிதிரையார் கலியினிடைச் சிலையினொடு
　பிணித்திடலு மிலங்கு மேன்மை
நெறிதருமஞ் செழுத்தினைக்கொண் டதுகடந்தோன்
　மலரடியை நினைந்து மன்னும்
பிறவியெனப் பகர்ந்திடுநீள் கடலதனைக்
　கடந்திடுவாம் பெரிது மன்றே. ருக

## மயூராசல புராணம்

இப்பிறவிக் கடல்கடப்பா னெண்ணுமனத்
　தினர்யாரு மினிதாய் மாதர்
துப்புறுமா மயலுவரி காராழி
　நீற்றறையுந் துணுக்கென் றேறி
மைப்படுவி டோதனமுங் கடந்துமத
　மலைகடந்து வந்த வெங்கள்
அப்பரிரு பதங்கருதிற் செப்புவதென்
　னேயவர்கட் கண்ணுந் தானே. ருஉ

## திருப்பெருந்துறைப் புராணம்

பாலிடை நஞ்சங் கண்டு பதைபதைத் தோடி யோர்பால்.
நூலிடை யவருண் பாக்கு நுவன்றமா லயனுண் ணணப்
பாலிடை நஞ்சங் கண்டு பதைப்பின்றித் தாமுண் டோர்பால்
நூலிடை யவரே யென்னப் பொலியு நோன்மையர் தாள்போற்றி.

---

(ருஉ) யாரும் இனிதாய்க்கருதில் அவர்க்குப் பிறவிக்கடல் கடத்தல் அண்ணும் என்க.

(ருங) பாற்கடலில் நஞ்சமுண்ண அம்பிகை பாகரைப் பிரார்த்தித்த மாலயனென்க.

### காசி ரகசியம்

அருப்பிள முலையாள் பாகத் தண்ணலா ரினிது மேய
திருப்புக லூருக் கப்பேர் யோகமே யென்று செப்பப்
பொருப்புமுள் ளுருகப் பாடிப் புகுந்துபே ரின்பந் துய்த்த
விருப்புறு புகழ்சா ணுவின் வேந்தர்தாள் வணக்கஞ் செய்வாம்.

### திருநாகைக்காரோணப் புராணம்

எழுபது வெள்ளஞ் சேனை யெடுத்திடு பலகற் கொண்டு
செழுமணிப் பரவை யொன்றே கடந்தவெஞ் சிலையோனுண
வழுவம ணிடுகல் லொன்றான் மறிகடல் பிறவி வேலை
முழுவதுங் கடந்த வெங்கண் முதல்வனுக் கன்பு செய்வாம்.

### திருக்குடந்தைப் புராணம்

ஒருகவி மீட்பான் காலற் கோலையொன் றெழுதி யச்சம்
பெருகவுந் தோற்றி யுய்த்த பெருஞ்சிலை யிராம னுணத்
தருகவப் பூதி மைந்தன் றனையெனக் கால காலற்
கருகலில் பதிகம் பாடி யருளினோற் கன்பு செய்வாம். ருசு

### மாயூரப் புராணம்

பெறுமணி நிறத்த மைத்தும் பிறங்குபொன் னுடம்பிற் போர்த்து
முறுபெருங் காவல் பூண்டோர்ந் துறங்குமாயவன்போலாது
பெறுமணி பொன்னே லாங்கைப் பேருழ வாரத் தாற்சோ
வுறுபுறம் விட்டா னந்த வுறக்கஞ்செய் பவர்தா ளுள்வாம்.

---

(ருசு) யோகம் - காரணப்பெயர்.

(ருஎ) பெறுமணி - கௌத்துவம். பொன் - பீதாம்பரம். ஓர்ந்-துறங்கல் - அறிதுயில். சோ - மதில்.

## உறையூர்ப் புராணம்

கந்தைமிகை யாங்கருத்துங் கையுழவா
ரப்படையுங் கவின்வெண் ணீறுஞ்
சிந்தையிடை யறுவன்புஞ் சிவஞானம்
பழுத்தொழுகு செய்ய வாயுந்
தந்தையொடு தாயிலான் திருவடிதை
வருமனமுந் தாரைக் கண்ணும்
நிந்தையறு முழுத்துறவு முடையபிரா
னடிபணிந்து நீடு வாழ்வாம். ருஅ

## திருவம்பர்ப் புராணம்

ஆலம்பெற் றிருண்ட கண்டத் தண்ணல்பா னேமி கொள்ள
காலம்பெற் றலரோன் றற்காக் கண்ணிடு மால்போ லாது[க்
சீலம்பெற் றருமை யாமோர் செந்தமிழ்ப் பதிகம் பாடிச்
சூலம்பெற் றுயர்ந்த வையர் துணையடி முடிமேல் வைப்பாம்.

## திருவாளொளிபுற்றூர்ப் புராணம்

ஓரோவொரு மாதர் மாமை நோக்கியுள் ளழிந்து மாழ்குஞ்
சரோருக னெடுமா லாதி வானவர் சமழ்ப்புக் கொள்ள
வரோதய மடவார் மாமை சிறிதுமுண் மதியா ராகிப்
பரோபகா ரத்தொண் டாற்றி யிருந்தவர் பாதம் போற்றி.

## விளத்தோட்டிப் புராணம்

மணிவடஞ் சிருக்கு நேமி வரிவளை மலர்க்கை தாங்கிப்
பணிபடு மதனுற் பந்தப் படுபிணி யொழியார் நாண
அணியுழ வாரந் தாங்கி யையனைப் பணிந்து பந்தப்
பிணியொழித் துயர்ந்த ஞானப் பெருந்தகைப் பிரானை யுள்வாம்.

## கோயிலூர்ப் புராணம்

உறவினுக் கிகற்கு நஞ்ச வுணவினுக் கமுதி னுக்குப்
பிறவினுக் கொருதன் மைத்தாய் நின்றருள் பெற்றி மேவி
மறவினுக் குணர்வி னுக்கு மேற்படு நிலைமை வாய்ந்த
துறவினுக் கரசு நாவுக் கரசினைத் தொழுதல் செய்வாம். ௬௨

## திருக்குறுக்கைப் புராணம்

இருளென்று சொலத்திரிவார் மனம்வேவ
நீற்றறையு ளிருந்து முற்றேம்
வெருளென்று துயர்க்கடலு ளவரமுந்தக்
கருங்கடற்கன் மிசைமி தந்து
மருளென்று மாறுத வெண்ணீறுங்
கண்மணியு மைங்தெ ழுத்தும்
பொருளென்று தெரிவித்த புண்ணியவா
கிசர்பதம் போற்றி வாழ்வாம். ௬௩

## தனியூர்ப் புராணம்

முகத்தின்மண் முழுதிடந்து முன்னவன் பாதங் காணு
அகத்தினு ணடைய வங்கை யலர்செறி யுழவா ரத்தின்
இகத்தின்மண் மேலிடந்தவ் விறையடி தலைமேற் சூட்டச்
சுகத்தினல் லூரிற் பெற்ற தூயரைத் துதித்து வாழ்வாம்.

## சூதசங்கிதை

பரசிவமென் றடியவரைப் பகருமறை
களிதூங்கப் பலரும் போற்றப்
பிரசநறுங் கடுக்கைமுடி யப்பரன்போல்
விடநுகர்ந்து பெயராச் சீற்றப்
புரசைநெடுங் களிற்றினைவென் றெழுவிடைவென்
முழுவிடைசூல் பொலியக் கொண்ட
அரசுதிருப் பாதமலர் பரசுபுமெய்ப்
போதமுறீஇ யமைந்து வாழ்வாம். ௬௫

---

(௬௫) சந்தியா தேவியை மணம்புரிய எழுவிடையைத் தழுவிய திருமாலுருவமாகிய இடபம்.

## புள்ளிருக்குவேளூர்ப் புராணம்

அருகரமைத் திடுநீற்றி னறைமுதலாந்
தீங்கடியார்க் கணுகா தென்னும்
பெருமையெடுத் துலகறியக் காட்டிமக
ரஞ்சுழலும் பெருநீர் மல்குங்
கருநிறத்தெண் டிரைக்கடலிற் கன்மிதப்ப
வருநாவுக் கரசின் செம்பொற்
றிருவடித்தா மரைமலரைப் பவக்கடலின்
கரையேறச் சிந்தை செய்வாம். ௬௬

## பழநிப் புராணம்

மலராசி நெறியரிடுங் கற்புணைவா
ரிதிமிதப்ப மறைவல் லோர்பற்
பலராசி பகர்திருப்பா திரிப்புலியூர்க்
கரைசார்ந்து பவநோய் தீர்வான்
புலராசி நெறியொருவிச் சிவசமய
நெறியினிடைப் போந்து ஞானச்
சலராசி படிந்ததமிழ் வாகீசர்
சரணமலர் தலைமேற் கொள்வாம். ௬௭

## திருவதிகைப் புராணம்

வாரணங் கொல்லவந்த காலையில் வருந்திவீழ
வாரணந் தன்னைச்செற்று மகிழ்ந்தவ ரிறும்பூதெய்த
வாரணங் கொல்லவந்த காலையில் வருந்திவந்த
வாரணம் வணங்கியேகும் வாகீசற் பணிவாமன்றே.

## இதிகாசம்—சிவரகசியம்

கதிரு லாவிய சபைதொறுங் காலொன்று தூக்கி
அதிர வீசிநின் றாடிய தாண்டவத் தவர்க்கே
மதுர மாத்திருத் தாண்டகச் செந்தமிழ் வகுத்த
சதுர னுவினுக் கரையன்றன் சரணமே சரணம். ௬௯

## சாத்திரங்கள்—சைவசமயநெறி

பரித்தரிப்பாம் பாசம் பரமசிவன் பாதந்
தரித்துயர்ந்த வாகீசர் தாள். ௭0

## பரமத திமிரபாநு

தரித்திடுவா மெம்முட் சிவனடிதன் னுச்சி
பரித்தசொல் வேந்தன் பதம். ௭௧

## சங்கற்பநிராகரணம்

வாக்கியலி னாலே மறைவனத்து வன்கதவை
நீக்கினன்று னீங்காதென் னெஞ்சு. ௭௨

## இறைவனூற்பயன்

வாக்கியலால் வன்கதவை மாமறைக்காட் டிற்றிறந்த
வாக்கிறைவன் பாதநினை வாம். ௭௩

## சித்தாந்த தரிசனம்

நின்றதிருத் தாண்டகத்தா னீடுயிர்போய்ப் போதமற
அன்றுரைத்தோன் தாளகம்வைப் பாம். ௭௪

## உருத்திராக்க விசிட்டம்

கொன்னதிகை யீசன்முன் கூற்று யினவாறே
யென்னுமிசை பாடி யிசையுடனே—யன்னவனால்
இன்னலொரீஇ வாகீச னென்னும் பெயர்பெற்றான்
றன்னடிவைப் பாமெந் தலை. ௭௫

## சிவபுண்ணியத் தெளிவு

திரைபொரு கடலிடைச் செறித்துத் தீயமண்
புரையினர் விடுசிலை புணைய தாகவே
உரைதரு மைந்தெழுத் துணர்த்து பாடலாற்
கரைவரு மப்பர்தாள் கருது வாமரோ. ௭௬

## நால்வர்கள் வணக்கம்

### கோயிற் புராணம்

திருஞான சம்பந்தர் செய்ய திரு வடிபோற்றி
அருணாவுக் கரசர்பிரா னலர்கமல பதம்போற்றி
கருமாள வெமையாளுங் கண்ணுதலோன் வலிந்தாண்ட
பெருமாள்பூங் கழல்போற்றி பிறங்கியவன் பர்கள்போற்றி.

### சேக்கிழார் நாயனர் புராணம்

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
யாழிமிசைக் கன்மிதப்பி லணைந்தபிரா னடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி
யூழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி. எஅ

### சிதம்பர புராணம்

அருமறையி னெறிவிளக்குந் திருஞான
சம்பந்த ராழி மீது
மருவுமோரு கன்மிதப்பின் வந்தநா
வுக்கரையர் மங்கை பாகத்
தொருவனம தடிமையிவ னெனவாண்ட
வாரூர ருலவா தோங்குந்
திருவருள்கூர் திருவாத வூரரிவர்
பதமலர்கள் சிரத்தின் வைப்பாம். எகூ

### பிரபுலிங்கலீலை

பெண்ணிற் கரசு தானக வென்பு பெருநீற் றறைபிரச
வண்ணக் கமல மலர்ப்பொய்கை யாகச் செங்கன் மாழையாய்
நண்ணச் சிறிய நரிகண்முடங் குளைய பரியாய் நகர்புகுதப்
பண்ணற் குரிய வமுதுறழ்முத் தமிழ்நால் வரையும் பணிகுவாம்.

### விருத்தாசல புராணம்

மருங்குகடற் கன்மிதப்பில் வந்தார்தம் பதம்போற்றி
பொருங்கரிமேற் கயிலையினிற் போனர்தம் பதம்போற்றி

நெருங்குநரி பரியாக்கி நிறுத்தினர்தம் பதம்போற்றி [றி.
இரும்பொருள்கேட் டரன்பக்கத் திருந்தார்தம் பதம்போற்

## கந்தபுராணச் சுருக்கம்

வெங்குருவிற் சற்குருவா யுதித்துக் கூடன்
மீனவன்மேல் வினைதீர்த்தோன் விரைத்தாள் போற்றி
துங்கமுறும் அலைகடலிற் சிலைய தான
தோணியில்வந் தவன்பாத தூளி போற்றி
எங்கள்பிரான் றனையிருளிற் பரவை வாசற்
கேவல்கொண்டோன் பதப்பதும விருதாள் போற்றி
புங்கவர்சூழ் திருவாத வூரில் வந்த
புண்ணியனு ரிணையடிகள் போற்றி போற்றி. அஉ

## கடம்பவன புராணம்

அடலமணைக் கழுவேற்றுந் திருஞான
சம்பந்த ரடிகள் போற்றி
கடலிடைக்கற் றூண்மிதப்ப வோதுதமிழ்க்
கடலினடிக் கமலம் போற்றி
மடலவிழ்பூங் குழற்பரவை வாசலினம்
மிறையிருதாள் வருந்த மீண்டுந்
தொடர்வருந்தூ தெனவிடுத்த சுந்தரன்பொற்
றுமரையாந் துணைத்தாள் போற்றி. அங

## வசவ புராணம்

போற்றி ஞானசம் பந்தன் பொலன்கழல்
போற்றி நாவுக் கரையன் புகழ்ப்பதம்
போற்றி வன்றொண்டன் பொன்னடி நாண்மலர்
போற்றி மாணிக்க வாசகன் பொற்சரண். அச

## சரப புராணம்

அழுதுலகை வாழ்வித்த திருஞான
சம்பந்த ரமணர் கொண்ட
பழுதடைந்த நெறிகடந்து பார்புரந்த
வாகீசர் பகிரண் டங்கண்
முழுதுடையான் றொடர்ந்தாண்ட முதன்மைபெறு
மாரூரர் முதல்வன் றூளெப்
பொழுதுநினைந் துருகுதிரு வாதவூ
ரண்ணல்பதம் போற்றல் செய்வாம். அரு

## கணேச புராணம்

அதிமதுரக் கவிமழைபெய் காழிமுகிற்
றுணைச்சரண மன்பி னேத்தி
நதிபதியிற் கன்மிதப்பில் வந்தவர்தம்
பதம்போற்றி நறுமென் கூந்தன்
மதிநுதனற் பரவைமணைக் கிறைவனைத்தூ
தாக்கினரை வணங்கிக் கூடற்
பதியதிப னிடத்திலரன் பரிகொணரச்
செயுமவர்தாள் பணிந்து வாழ்வாம். அசு

## இருடிவிந்தப் புராணம்

ஞானசம் பந்தன் றன்னை நாவினுக் கரசை யெண்டோள்
வானவன் றடுத்தாட் கொண்ட வள்ளலை வாத வூரெங்
கோனையொன் பதிற்றே ழென்னுங் கோதின்மா தவரை நீறு
மேனியி லணிவோர் தம்மை விருப்பொடு கருத்துள் வைப்பாம்.

## நம்பி திருவிளையாடல்

படிபுகழ் சண்பை வேந்தர் மலரடி போற்றி பத்தி
வடிவுடை யியல்தேர் நாவுக் கரசடி போற்றி மாலை
முடிகொள்சுந் தரர்தாள் போற்றி மூதுரை வாத வூரர்
அடியிணை போற்றி மற்றேரெங் கடியவ ரடிகள் போற்றி.

## சிவானந்தமாலை

சொற்கோவுந் தோணிபுரத் தோன்றலுநஞ் சுந்தரனுஞ்
சிற்கோல வாதவூர்த் தேசிகனு—முற்கோலி
வந்திலரேல் நீறெங்கே மாமறைநூல் தானெங்கே
எந்தைபிரா னஞ்செழுத்தெங் கே. அசு

## நிஷ்டானுபூதி

அடிபணிவே னுமைசொர்க்கத்
தமுதையயின் றினியகவி யமுதந் தந்தோன்
அடிபணிவேன் பவக்கடலு மூவர்க்கடலுங்
கடந்தவாக் கரசின் செங்கேழ்
அடிபணிவேன் பரவைபாற் பரசிவனைத்
தூதாக அனுப்பு வித்தோன்
அடிபணிவேன் திருவாத வூரடிகள்
புகழேத்தி யன்பின் மாதோ. சுO

---

கரையேறவிட்டநகர்

திருநாவுக்கரசு சுவாமிகள்

# சரித்திர நவமணிமாலை

## கட்டளைக் கலித்துறை

திருமுனைப் பாடிநாட் டிற்றிரு வாமூர்வே ளாளர்குலத்
தருமுனை வாழ்க்கைப் புகழனார் மாதினி யாரொடுய்ய
வருமுனைச் சைவம் வளரத் திலக வதிபின்வந்தார்
கருமுனை மாய்த்த மருணீக்கி யாரிக் கடனிலத்தே. க

நில்லா வுலகியல் போர்ந்தற நேசித்துஞ் சொல்லிறைவர்
கொல்லாமை நன்னெறி கொண்டமை போறல் குறித்தம
செல்லா வதனிலை தேர்ந்து தருமசேனப்பெயர்பெற் [ணிற்
றெல்லாரை வென்றுறைந் தாரது முற்றுமஃ தோர்குறிப்பே.

பேதத் தமண்மதப் பெட்பினைப் பேதித்து நின்றெழும்பின்
மோதத்த னுக்குக வென்றேத்துந் தவ்வை மொழிக்கிரங்கிச்
சூதத் ததிகைப் பிரான்சூலை யாற்றெண்டு கொண்டருள்
ணுதத்தி னுற்றனர் நாவுக் கரசரந் நன்னுமமே. [விண்

நாமத்திற் சாவகர் பல்லவற் கீது நவின்றுசுண்ணச்
சேமத்தி னுய்த்தும் விடமூட்டி யுந்தந்தி முற்செறித்துந்
தாமத்தி யிற்சிலை யிற்பிணித் திட்டுமத் தாண்டகவேந்
தேமத்தி னுய்ந்தன ரெம்பெரு மானை யினிதிசைத்தே. ச

இசையி னிலச்சினைச் சூல மிடப மெழிற்புயங்கண்
மிசையிற் கடந்தை விமலனிற் பெற்றமண் மேயவுடல்
வசையி னிகந்துசம் பந்தரு மப்பரென் றேத்தமன்னி
நசையிற் றிருவடி சூட்டப்பெற் றூர்நல்லூர் நம்பரினே. ரு

ஏத்தியு மெய்ப்பொருட் குந்திரு நாவுக் கரசெனும்பேர்
சாத்தியும் வாழ்ந்தவப் பூதியின் மூத்தமைந் தர்க்குவிடஞ்
சீத்திறை வீழியிற் பொற்காசு கொண்டு திருமறைக்காட்
டோத்தினின் மூய கதவந் திறப்பித் துதவினரே. சு

உதவுறு வாகீச ரொண்பழை யாறை யுமாபதியைக்
கதமுறு சாவகர் தாமறைத் துற்றமை கண்டவரை
யதமுறு வித்தா லயமாக்கி யேத்திநல் லாற்றுணவு [ரே.
திதமுறு பைஞ்ஞீ லியற்பெற்றுண் டேதொண்டு செய்தன

செய்ய கயிலை யினிற்சிவ ஞேலக்கஞ் சேவித்துய்வான்
துய்ய பதங்கரந் தேய நடந்துஞ் சுடரகலம்
வெய்ய நிணம்பட வேபுரண் டும்வியன் ஞாலமுய்வான்
ஐயன் மறித்தஃதை யாற்றளித் தான்சொல் லரசருக்கே.

சொல்லார் திருப்புக லூரினிற் சோதனை யின்பொருட்டு
வில்லாரு மாமணி பொன்னர மங்கையர் மேவவுநீத்
தல்லார் களத்த னடிபுக் கனரா ளுடையரசர்
எல்லா வுயிர்களு மின்பமுத் தித்திரு வெய்துறவே. கூ

---

(ரு) அருள் விண்ணுதம் - அருளிய அசரீரிமொழி.

## தனி

### கோச்சகக்கலிப்பா

ஒருநாவுக் குரைசெய்ய வொண்ணாத சீர்த்தியரென்
றருநாமத் தருண்மொழித்தே வருமொழியத் தகுதியராய்க்
கருநாமக் களைகளைவான் கரையேற்று நகரமருந்
திருநாவுக் கரையர்பதஞ் சிந்தையில்வைத் திறைஞ்சுதுமால்.

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

திருவாக்கு மெழிலாமூர் தனிலுதித்தெக் கலையுந்
தேர்ந்ததிகைப் பிரானருளாற் செறிசூலை தவிர்ந்து
கருவாக்கு முருட்டமணக் கடலுமவர் வஞ்சக்
கடலுமவ ரிடுகட்லுங் கடந்தருளிற் கதித்தே
மருவாக்கு மலர்ப்பொழில்சூழ் கரையேற விட்ட
மாநகரிற் புரிமடத்தில் வாஞ்சையுட னமருந்
திருவாக்குக் கரையர்தமைப் பெருவாக்கி னிறைஞ்சிற்
சிந்தித்த பேறனைத்துஞ் சந்திக்கு மெளிதே.

—இராமலிங்க சுவாமிகள். (சிதம்பரம் - ஈசானிய மடம்.)

---

கரையேறவிட்டநகர்த்

## திருநாவுக்கரசு சுவாமிகள் பதிகம்

### நேரிசைவெண்பா

கற்றவர்கண் மெச்சுங் கரையேற விட்டநகர்
உற்ற வருட்டிருநா வுக்கரையர்க்—கற்றமிகும்
அற்ப மதியே னறைபதிக முற்றவவ்வூர்க்
கற்பகவி நாயகன்றாள் காப்பு.

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

திருவளரு முனைப்பாடி நாட்டின் மிக்க
திருவாமூர் வேளாளர் குலப்பால் வேலை
வருமணிபோற் புகழனார் புதல்வ ராகி
மருணீக்கி யாரெனவே வந்தார் தம்மைத்

தெருளாள னருளாளன் சொக்க லிங்கன்
செய்ததிகழ் மணிப்புரிசைக் கோபு ரத்திற்
கருமுகில்க ணெருங்கிமிகத் தவழ்ந்து லாவுங்
கரையேற விட்டநகர்க் கண்டே னனே. க

அரியவருட் கலைதழைப்பத் தவமிக் கோங்க
வஞ்ஞான திமிரமற வலரி போலத்
திருவதிகைப் பரனருளாற் சைவ மல்கத்
திலகவதி யாருடனே யுதித்தார் தம்மைப்
பெரியவர்க ளிதயமெனத் தெளிந்து நீத்தம்
பெருகிவரு கெடிலநதித் திரைகண் மின்னுங்
கருமணலோ டொளிமணிகள் கொழிக்குஞ் செல்வக்
கரையேற விட்டநகர்க் கண்டே னனே. உ

வெஞ்சமணர் மதத்துறுங்கா லவர்க ளாலே
விலக்கவொணாச் சூலையுற வருந்தி யோர்ந்தே
தஞ்சமெனச் சோதரிசொற் படிய ரற்குச்
சாத்துபதி கத்தினங்நோய் தவிர்ந்துய்ந் தாரை
அஞ்சிறைய வோதிமங்கள் கண்ப டுக்கு
மலர்ப்பழனத் துழவர்மடை மிதிக்கச் செந்தேன்
கஞ்சமலர் நின்றுநனி பெருகுஞ் சீர்சால்
கரையேற விட்டநகர்க் கண்டே னனே. ந

கொல்லவெணும் பல்லவரா யன்றீ நீற்றுக்
கொடுவறையி லடைத்திடவு மகிழ்ச்சி யெய்தி
எல்லையிலாப் புகழரன்மேன் மாசில் வீணை
யென்றுதிருக் குறுந்தொகைப்பாட் டிசைத்தார் தம் [மை
நல்லமணம் வீசுமெழின் மலரிற் றேய்ந்த
நறவதனை வெறியுறவே பருகி யெங்குங்
கல்லெனவே யளிமுரலு நளிர்பூஞ் சோலைக்
கரையேற விட்டநகர்க் கண்டே னனே. ச

சற்றுமிரங் காச்சமணர் கல்லிற் கட்டிச்
சாகரத்திற் றள்ளிடக்கற் றெப்ப மாகச்
சொற்றுணைவே தியனெனவே பதிகம் பாடித்
தூயபஞ்சாக் கரந்துணையாக் கரைசேர்ந் தாரைப்
பற்றுபர தத்துவத்தின் பொருளை யோர்ந்து
பாரினர்க்குப் பரமார்த்தம் பகர வல்ல
கற்றவர்கண் முற்றமெலாங் கலையாள் வைகுங்
கரையேற விட்டநகர்க் கண்டே னனே. ரு

பரிதியொளி யன்மதியன் மறைச்செவ் வாயன்
பாம்புதனைப் பணியாக்கொள் குருநா தன்மேற்
சுருதிநயக் கவிபொழிந்து சமணர் கூட்டச்
சூட்டரவுக் கசனியெனத் தோன்றி னாரை
விரிமலரி னறுந்துகளை வீதி தோறும்
வீசுமிளந் தென்றனிதஞ் சிதறத் தேனைக்
கரியவளி பெரிதும்வழுக் குறவே சிந்துங்
கரையேற விட்டநகர்க் கண்டே னனே. சு

அன்றொரிலை கொணரச்சென் றரவான் மாண்ட
அப்பூதி யடிகளின்சீர் மைந்த னுக்கு
வொன்றுகொலா மவர்சிந்தை யென்றே யோதி
யுயிரளித்தன் னார்விருந்துக் குகந்தார் தம்மை
அன்றிலொடு மயில்குயில்கொக் கன்னம் பூவை
யவந்திகையர்க் கம்புறவு சக்ர வாகங்
கன்றுதொட ரானினமான் கயங்கள் சூழுங்
கரையேற விட்டநகர்க் கண்டே னனே. எ

இடைக்கிடைநன் மாரிபொழி மறைக்காட் டின்கண்
இரக்கமொன்றி லீரெனவே பதிக மோதி
அடைத்ததிருக் கதவங்கள் திறக்கச் செய்த
அப்பரைநல் லுழவாரப் பணிகொண் டாரைத்

தொடற்கரிய தழலிரவி மதியின் மிக்க
சுடர்விளங்கு நவமணிகண் மலைகள் போலக்
கடைத்தெருவில் வணிகரெலாங் குவித்து விற்குங்
கரையேற விட்டநகர்க் கண்டே னனே. அ.

இரும்புவனத் துறுமடியர்க் கெண்ணியநல் வரங்கள்
ஈயமன முவந்துவெள்ளி வரைவா ழீசற்
கரும்பொனினம் பலமெனத்தந் திருவுள் ளத்தை
யமைத்திலகு செம்புனித வப்பர் தம்மைச்
சுரும்பணுக மதம்பொழிபு நால்வா யீட்டஞ்
சோலைகளிற் கன்னல்களைத் துய்க்குங் காலக்
கரும்பொழுகு சாறுறலாற் செந்நெ லோங்குங்
கரையேற விட்டநகர்க் கண்டே னனே. கூ.

சித்திரையிற் சதயமதிற் சைவ மோங்கச்
சிவப்பேறு பெற்றவெம தப்பர் தம்மைப்
பத்தன்வேங் கடசாமி பணிந்தே யுய்யப்
பத்திநெறி யிலக்கணங்கள் பகர்ந்த கோவை
வித்தகரைத் தாண்டகங்க ளருளி னனை
வெம்பிறவி கடத்திமுத்திக் கரையி லேற்றுங்
கத்தனெனுங் கற்பகவி நாய கன்வாழ்
கரையேற விட்டநகர்க் கண்டே னனே. க0.

—பு. தே. வேங்கடசாமிப் பிள்ளை.

---

## திருமுனைப்பாடி நாடு

### பெரியபுராணம்

கங்கையு மதியும் பாம்புங் கடுக்கையு முடிமேல் வைத்த
அங்கண ரோலை காட்டி யாண்டவர் தமக்கு நாடு
மங்கையர் வதன சீத மதியிரு மருங்கு மோடிச்
செங்கயல் குழைக ளுடுங் திருமுனைப் பாடி நாடு. க.

தொன்மைமுறை வருமன்னின் றுகளன்றித் துகளில்லா
நன்மைநிலை யொழுக்கத்தி னலஞ்சிறந்த குடிமல்கிச்
சென்னிமதி புனையவளர் மணிமாடச் செழும்பதிகண்
மன்னிநிறைந் துளதுதிரு முனைப்பாடி வளநாடு. உ

மறந்தருதி நெறிமாற மணிகண்டர் வாய்மைநெறி
அறந்தருநா வுக்கரசு மாலால சுந்தரரும்
பிறந்தருள வுளதானு னம்மளவோ பேருலகிற்
சிறந்ததிரு முனைப்பாடித் திறம்பாடுஞ் சீர்ப்பாடு. ௩

## வில்லிபாரதம் - சிறப்புப்பாயிரம்

அவ்வைபா டலுக்கு நறுநெய்பால் பெருகி
யருந்தமி ழறிவினுற் சிறந்து
பௌவநீ ராடைத் தரணிமான் மார்பிற்
பயிலு முத்தரியமும் போன்று
மொய்வரால் கெண்டை வாளைசேன் மலங்கு
முதலிய சனமெதிர் கொள்ளத்
தெய்வமா நதிநீர் பரக்குநா டந்தத்
திருமுனைப் பாடிநன் னுடு. ௪

பாவருந் தமிழாற் பேர்பெறு பனுவற்
பாவலர் பாதிநா ளிரவின்
மூவரு நெருக்கி மொழிவிளக் கேற்றி
முகுந்தனைத் தொழுதநன் னுடு
தேவரு மறையு மின்னமுங் காணுச்
செஞ்சடைக் கடவுளைப் பாடி
யாவரு மதித்தோர் மூவரி லிருவர்
பிறந்தநா டிந்தநன் னுடு. ௫

## * திருவாமூர்

### பெரிய புராணம்

இவ்வகைய திருநாட்டி லெனைப்பலவூர் களுமென்று
மெய்வளங்க ளோங்கவரு மேன்மையன வாங்கவற்றுட்
சைவநெறி தலமேழும் பாலிக்குந் தகைமையினல்
தெய்வநெறிச் சிவம்பெருக்குந் திருவாமூர் திருவாமூர்.

### திருப்புகழ்

சீத மதிய மெறிக்குந் தழலாலே
சீறி மதனன் வளைக்குஞ் சிலையாலே
ஓத மருவி யலைக்குங் கடலாலே
ஊழி யிரவு தொலைக்கும் படியோதான்
மாது புகழை வளர்க்குந் திருவாமூர்
வாழு மயிலி லிருக்குங் குமரேசா
காத லடியார் கருத்தின் பெருவாழ்வே
காலன் முதுகை விரிக்கும் பெருமாளே.

### தாயுமானர்

ஏரின் சிவபோக மிங்கிவற்கே யென்னவுழ
வாரங்கொள் செங்கையர்தாள் வாரம்வைப்ப தென்நாளோ.

---

* அப்பர் சுவாமிகள் அவதரித்த இடமாகிய திருவாமூர்—பண்ருட்டி ஸ்டேஷனுக்கு 6 மைல் தூரத்திலுள்ளது. அப்பரது பிறந்த நாள் விழா பங்குனிமீ ரோகணி நட்சத்திரத்தில் நடைபெறும். அப்பரைத் தந்த அம்மையப்பர் திரிபுரசுந்தரி சமேத பசுபதீஸ்வரர். சுந்தரர் பிறந்த திருநாவலூர், திருவாமூர்க்கு மேற்கில் 3 மைலி லுள்ளது.

## அற்புதப் பாடல்

தலைகொ ணஞ்சமு தாக விளையுமே
தழலி னீறு தடாகம தாகுமே
கொலைசெய் யானை குனிந்து பணியுமே
கூர ராவிடந் தீரெனத் தீருமே
கலைகொள் வேத வனப்பதி தன்னுளே
கதவு மீண்டு கடுகத் திறக்குமே
அலைகொள் வாரியிற் கல்லு மிதக்குமே
அப்பர் போற்று மருந்தமிழ்ப் பாடலே.

---

## திருநக்ஷத்திரம்

பாடிய சம்பந்தர் வைகாசி மூலம் பயிலுமப்பர்
நீடிய சித்திரை மாதச் சதய நிறைவன் றொண்டர்
ஆடியிற் சோதி திருவாத வூரர்நல் லாணிமகந்
தேடிய சேக்கிழார் வைகாசிப் பூசஞ் சிறந்தனரே.

## நால்வர் வயது

அப்பருக்கேண் பத்தோன் றருள்வாத வூரருக்குச்
செப்பியநா லெட்டினிற் றெய்வீக—மிப்புவியிற்
சுந்தரர்க்கு மூவாறு தொன்ஞான சம்பந்தர்க்
கந்தம் பதினா றறி.



# நூல் கிடைக்குமிடங்கள்

---

1. சுதந்திர நூற்களுஞ்சியம்,
   22/D அப்பாவு முதலி வீதி,
   கடலூர் N. T.

2. திருச்சிற்றம்பல இல்லம்,
   கிழக்குமருதூர்,
   திருநாமநல்லூர் P. O.

3. முருகவேள் புத்தகசாலை,
   12, கணபதிமுதலி தெரு,
   இராயப்பேட்டை, சென்னை.

4. அதிபர்,
   கண்ணன் பிரஸ்,
   பண்ருட்டி.

---

சைவ சபைகள், நூற்களுஞ்சியங்கள் ஏக காலத்தில் 10 பிரதிகள் வாங்கினால் இரண்டு பிரதிகள் இலவசமாய் அனுப்பப்படும். அதிக மாக வாங்குவோர்க்குத் தக்க கமிஷன் தரப்படும்.